# மூன்று பெண்கள்.



எழுதியவர் :

காந்திதாஸ் (alias) A. R. சாமி.
ஆசிரியர் "பொற்கொடி"

மீனாட்சி பதிப்பகம்,
சேலம்-1.



 1969. [விலை : 50 பைசா.

## முன்னுரை :

சிறுமதிக்கு எட்டிட்ட வாறுசெய்த
சிறுநூலாம் கவிதைதனில் ''மூன்றுபெண்கள்''
அறுபகையும், பெற்றோரை வெறுக்கும்போக்கும்
அன்பற்றும் சிக்கன மற்றொழுக்கமற்றும்.
பறியிழந்தும் தொழிலிழந்தும், குடும்பக்கட்டு
பாடதுவும் ஒற்றுமையும் இன்றிவாழ்ந்த
குறைபட்ட குடும்பத்தின் வரலாறீந்தேன்.
கொடுமைகளைப் படித்திடுவீர் வணக்கம். நன்றி.

ஆசிரியர்.

புத்தகம் வேண்டுவோர் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும் :—

**காந்ததாஸ**
ஸ்ரீ மூர்த்தி பிக்சர்ஸ்,
12, வேளாளர் வீதி,
கிச்சிப்பாளையம், சேலம்-1.

# மதிப்புரை:

மூன்று பெண்கள் என்ற தலைப்பில் எழுதப்பட்ட செய்யுள் நடைக் கதையானது. உலகத்தின் பாசம், குடும்பம், கட்டுப்பாடு, சேமிப்பு, சிக்கனம், நிதானம் என்ற எல்லாவித குணாதிசயங்களையும் எடுத்துக்காட்டும் காவியம் என்பதிலும், நடையில் கோர்வையையும், கதையில் சோகத்தையும் ஆசிரியர் எடுத்துக்காட்டும் முறையே தனி. ஆடம்பர வாழ்க்கை எத்தனை கீழ்த்தர மானது என்பதற்கு மூத்த மகளும் கடைமகளும் எவ்வளவு எடுத்துக்காட்டுகின்றனரோ, அதே அளவு பாசத்தில் உழலும் பேதை பெண் கனகம் அவ்வளவு உயர்ந்தவளாக்கப்படுகிறாள். ஆண்மகன் இல்லாக் குறையும், சிறுசேமிப்பு செய்யவேண்டிய அவசியத்தையும் ஒன்றுக்குப்பின் ஒன்றாக அமைத்தமுறை ஆசிரியரின் திறமைக்கு ஒரு முத்தாய்ப்பு. சிக்கனமில்லாமையும், அதிகக் குழந்தை பெற்றெடுப்பதையும் குடும்பக் கட்டுப்பாடு தேவையையும், சினிமாவில் பெண்களும், அடுப்பங்கரையில் ஆண்களும் என்ற தற்கால நடப்பும் வெகு சுவையாகக் காட்டப்படுகின்றது. சோகமூட்டும் இப்பாவையவர் முகப்பிட்ட வரலாறு படிக்கப்படிக்க சுவை குன்றாது விருவிருப்பாக அமைந்துள்ளது.

*போன் எண். 2923*


**V. கலைப்பித்தன்**

கதை ஆசிரியர், பிலிம டைரெக்டா

ஸ்ரீ மூர்த்தி பிக்சர்ஸ்

12, வேளாளர் வீதி, சேலம்-1.

# மதிப்புரை :

பாவையர் மூவர், "கடமை, கண்ணியம், கட்டுப்பாடு" என்ற சொற்றொடர் தான் ஞாபகம் வருகிறது. தாய் தந்தையரின் கடமை, மக்களின் (பிள்ளைகளின்) கண்ணியம், இடத்திற்குத் தகுந்த கட்டுப்பாடு இவை யாவற்றையும் எடுத்துக் காட்டிய ஆசிரியர் முதுபெரும் எழுத்தாளர்களையும் மிஞ்சும் வகையில் கோர்வையுடன் அமைத்துள்ளார் இவர்போன்ற இளம எழுத்தாளர்களை ஊக்கி தமிழக மக்கள் தமிழ் உயர வழிசெய்வர் என நம்புகிறேன்.

*நாடக கதை வசனகர்த்தா சினிமா நடிகர்*

**N. S. K. இராமன்**

**ஒத்தக்கோவில்**

(மதுரை மாவட்டம)

# மூன்று பெண்கள்.



## எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கோவைமா வட்டத்திற் கப்பால்காட்டில்
கோபாலன் என்றவொரு பரமஏழை,
சேவைமிக பொறுப்போடு பள்ளிஒன்றில்
சிறப்போடு செய்தங்கு வாழ்ந்துவந்தான்.
தேவைக்குத் தக்கபடி வருமானத்தை
தேடியவன் வாழமுடியாமல் நின்ருன்.
பூவையர்கள் மூவருக்குத் தந்தையானுன்.
பொல்லாத கஷ்டமவன் நாளும்பட்டான்.

பணக்கார ஞய்வாழ யெண்ணியன்னேன்;
பாங்காக முயற்சித்தான். அவனேமாதம
கணக்காக சம்பளத்தை வாங்கிவீட்டு
காரியத்தைக் கவனிக்கச் சரியாய்ப்போச்சு.
இணக்கமுடன் எந்நாளும் மனைவியோடு
இருந்திட்டான், பிள்ளைகளை அன்பாய்போற்றி
குணமோடு வளர்த்திட்டான் நாளும் நன்ருய்,
குறிப்பிட்ட சம்பளத்தில் மிச்சம் காணேம்.

என்ருலும் அவனீன்ற மூன்று பெண்கள்
எழிலாக இருந்தார்கள். அதனுலன்னேன்;
நனருகத் திருமணத்தைச் செய்துவைத்தான்.
நங்கையர்கள் மூவரையும் மாலைமாற்றிச்
சென்ருர்கள் காளையர்கள் இன்பங்கொண்டு;
சிறப்போடு பொறுப்போடு என்றும்நன்ருய்
குன்ருத எழிலோடு வாழ்ந்துவந்தார்.
குறையில்லை பெருமையுடன் இருந்திட்டார்கள்.

ஆல்போலும் அருகம்புல் போலும்நாளும்
அழகான முறையோடு வாழ்ந்துநிற்க;
சூழ்நிலையின் காரணத்தால் கனகம்வாழ்க்கை
சூறுவளி யாய்மாறி எல்லாம்தோற்று
பாழ்பட்டு தொழில்விட்டு பிறகுஅந்த
பாங்கான கனகத்தின் கணவன்வேறு
ஆள்ஒருவ ரிடம்வேலை பார்த்துவந்தான்.
யாருமெதிர் பார்க்காத வண்ணம் அன்னோன்.

கனகத்தின் அக்காளும் தங்கையுந்தான்
கவனிக்க வில்லையிவள் சிரமந்தன்னை.
தனம்நிறைய வைத்திருந்தும் அவர்கள்வந்து
தைரியத்தை உரைத்துப்பொருள் அளித்தாரில்லை
கனம்பெரிய பாதிரியார் ஒருவர்வந்து,
கஷ்டத்தை கண்டுதுயர் பட்டுபின்னர்
மனம்விட்டுப் பேசிப்பின் தனதுவீட்டில்
மகிழ்வோடு வேலைக்கு அமர்த்திக்கொண்டான்.

போதாத சம்பளந்தான். இருந்தபோதும்
பெரியதொரு உதவியென நினைத்தானந்த
மாதாவை மறவாத கனகம்என்ற
மங்கையவள் மணவாளன் சோமுஎன்பான்.
தோதாகப் பேசிடுவான். அவனோ மேலும்
தேவைக்கு ஒத்துழைக்கத் தயங்கமாட்டான்.
தீதாக யாருக்கும் இடையூர்செய்ய
தோனுது அவனுக்கு நேர்மைமிக்கான்.

இவனிந்த முறையோடு வாழ்க்கைதன்னை
இல்லாளின் உதவியுடன் நடத்துங்காலை;
இவனுக்குப் பெண்தந்த மாமன்என்பான்
இனியென்ன செய்திடுவோம் வயதாச்சென்று
சிவபக்த னைஅவன் சிந்தித்தன்று
சொல்லமுடி யாதபெருங் குழப்பங்கொண்டு,
அவலநிலை யோடுஅவன் இருந்தான்வாழ்வில்
அவகாசம் பள்ளியிலே என்றுங்காணோம்.

யெதான கோபாலன் வேலைதன்னை
வகையோடு அன்றுடம் செய்துவந்தான்.
பயனுள்ள பொறுப்பேற்று இருக்குங்காலை,
பாங்கான மனைவிக்கு சக்திகெட்டு
சுயநினைவு அற்றுஅவள் படுக்கைகொண்டு,
சொல்லமுடியாதபடி இருந்தாளாங்கு
வியப்பாக மற்றவர்கள் எண்ணுமாறு
வாழ்ந்திட்டான் படுகஷ்டத் தோடுஅன்னோன்.

மனைவியவள் படுக்கையிலே கிடந்ததாலே
மனமுடைந்து போய்விட்டான் ஒழுங்காய்பள்ளி
தனையடைந்து பணிபுரிய மறந்துநின்றான்.
தலைமையாசிரியரவர் பலமாதங்கள்
நினைத்திருந்தார், கோபாலன் வருவானென்று
நிலைகெட்டு மனைவியவள் இருந்ததாலே
தினையளவும் தொழிலதனை நினைத்தானில்லை.
திருவாத்தான் போலவனும் இருந்தான்பாவம்.

அறுபதுக்கு மேல்வயது ஆனதாலே
அதனைஒரு காரணமாய் வைத்துப்பின்னர்
பொறுப்புடைய ஆசிரியர் சமயம்பார்த்து
பெரியவனும் கிழவனுக்கு வேலைநீக்கம்
உறுதியென உரைத்திட்டார், கிழவன்நின்றான்.
ஒன்றுமிலை ஏழையவன் என்னசெய்வான்.
அறுதிநிலையாய்க்கிடந்தாள் கிழவிபாவம்
அதுகண்டு கிழவனவன் துடித்தான்வாடி.

உடல்நோயால் படுக்கையிலே இருந்ததாலே
உணவெதுவும் இல்லாமல் மெலிந்தாள்வாடி.
அடல்கின்ற பாவனையில் அய்யோபாவம்
அவளைவந் தணுகியது நோய்தானென்று.
மடல்மூன்று பெண்களுக்கும் தந்தைஎன்போன்
மனக்கவலையுடனெழுதி அனுப்பிவைத்தான்.
கடல்பொங்கி எழுந்திட்ட வாறுபோல
கனகமவள் கலங்கிட்டாள் கடிதம்கண்டு.

மூத்தமகள் மல்லிகையும் இன்னும் அந்த
மூன்ருவ தாய்ப்பிறந்த ரஞ்சிதம்மாள்
தீத்தமுடன் வாழ்ந்தார்கள் நாளுமநன்ருய்.
தீராதகவலேயுடன் கனகம் வாழந்தாள்.
ஆத்தமுடன் அழுதிட்டாள் கனகம்வந்து
அத்தருணம் வந்தார்கள் கடையாள்மூத்தாள்.
கூத்தமது போகின்ற நிலேயில்அந்த
கூன்கிழவி கிடந்திட்டாள் கனகமநொந்தாள்.

பெருமையுடன் ஏதைஏதையோ பேசிவிட்டு
பிறகுபெற்ற தாயாரைப் பார்க்கவெண்ணி
அருமையுடன் அலங்காரம் செய்துகொண்டு
அன்போடு ஆளுக்கொரு குழந்தைதன்ஊே;
விருப்பமுடன் இக்கத்தில இடுக்கிக்கொண்டு,
வெகுமான மாயவர்கள் வந்திட்டார்கள்
தருக்கமது இருபேரும் செய்துகொண்டு
தைரியமாய் வந்தங்கு இருந்திட்டார்கள்.

கடிதங்கண் டெள்ளளவும் கலங்கவில்லே
கனகத்தின் அக்காளும் தங்கையுந்தான.
அடிமேலே அடிவைத்து ஒன்ருய்கூடி
அம்மாவைப் பார்க்கத்தான் வந்தாரனறு
படித்திருந்தும் பாவிகள்தாம் கொஞ்சமேனும
புத்தியில்லா அசடுகளாய் இருந்திடடார்கள்
பிடிவாத மாயவர்கள் இருந்ததோடு
பெற்ருேரை மதியாமல் இருந்துவந்தார்

தாய்படுக்கை கொண்டிட்டாள் என்றுஅன்று
தக்கபடி எழுதிருந்தும் அக்காள்தங்கை;
நோய்கண்ட தாயதஊே வந்துபார்க்க
நிதானமுடன் வந்தார்கள் என்றுதந்தை
பாய்மேலே கண்ணீரை உகுத்தான்பின்னர்
பதைத்திட்டான் பாவமவன் என்னசெய்வான்.
வாய்பேச முடியாமல் கனகம்பாவம்
வக்கற்று இருந்திட்டாள் சோர்வுகொண்டு.

கடைமகளும் தலைமகளும் தாயைப்பார்க்க
கைவீசி வந்தார்கள் கர்வத்தோடு
கடைத்தெருவில் கனகமவள் தேடிப்பார்த்து
கனிகள் தாம் பலவகைகள் வாங்கிவந்தாள்.
தடையேதும் சொல்லாமல் தாயார்வாங்கி,
தனனிட்டமபோல் தின்று பசியைத்தீர்த்தாள்.
இடையிடையே பேச்சிகளைப் பேசிக்கொண்டு
இருந்தார்கள் மூத்தபெண்ணும் மூன்றும்பெண்ணும்

வீட்டிலொரு சாமானும் இல்லையாவம்,
வாங்கிவர காசுமவளா கையில் இல்லை
பாட்டியவள கிடக்கின்ற நிலையைக்கண்டாள்.
பயமாக இருந்ததுவே என்செய்வார்கள்.
தாட்டீகம் இல்லாத கோபாலன்தான;
தைரியத்தை இழந்துமனம் வாடிநின்றான்.
நாட்டமது ஊரிலவன செய்துகொளள
நாணயமே கெட்டிருந்தா னெனன செய்வான்.

அரைரூபாய் ஒருரூபாய் கொடுங்கள் என்று;
அனபோடு பலரையவன் அணடிக்கேட்டான்.
குறைசொல்லி விட்டார்கள் கொடுக்கவில்லை.
கோபாலன் மனமுடைந்து வீடுசென்றான்.
இறைவாவுன் சோதனையா யெனறுசொல்லி
ஏக்கமுடன நெய்போல உருகிநின்றான்.
சிறைபட்ட உத்தமனைப் போலவன்னேன்;
சிரமமுடன் உடல்நடுங்க பதறிநின்றான்.

கடன்கொடுப்பார் யாருமிலை, கெஞ்சிக்கேட்டு
கட்டாயமாயதனை வாங்கினாலும்;
கடன்கட்ட வழியில்லை, அதிலும்தொல்லை.
கண்ணியமாய் வாழ்வதெனில் வசதியில்லை.
இடர்பட்டு நிற்கின்றேன். இன்னும்எப்போ
இனனல்கள் நீங்கிடுமோ அறியேன். வாழ்க்கை
கடத்தணுமே என்செய்வதென்று அந்த
கிழவனெனும் கோபாலன் கலங்கிநின்றான்.

ஏழையெனில் யாருதவி செய்வாரென்ற
எண்ணமதை தன்மனதில் எண்ணிக்கொண்டு;
கோழையென வாழ்ந்திட்டக் கிழவனந்தக்
கோபாலன் மெய்மறந்து அழுதான்பாவம்.
வாழையடி வாழையென வாழ்ந்துநிற்க,
வகையான ஆண்மகனே இல்லை. மேலும்,
நாளை நம் கதிஎன்ன ஆகும்என்று
நடுக்கமுடன் நினைத்திட்டான்! நினைத்திட்டானே !

பலர்வீட்டில் பணம்செலவு செய்யவெண்ண
பாதையது இருக்கென்று பார்க்கிறார்கள்.
சிலர்கெட்டுப் போனதினால் வாழவெந்த
சீருமிலா கோலமுடன் இருக்கிறார்கள்
உலர்ந்திட்ட தவனுடைய மேனியெல்லாம்.
ஒன்றுமறியாமலவன பதறி நின்றான்.
மலர்தனிலே உள்ளவிதழ் வாடினாற்போல்
மங்கையெனும் கனகமவள் வாடிநின்றாள்.

தனக்குஒரு மகன்பிறந்து இருந்தாலன்னேன்
தனக்குதவி யாயிருப்பான் ஐகோவென்று
தினமுமதை நினைந்துருகி அழுதான்பாவம்
திருமாலின் செயலதுவாய் இருக்கும்போது
தினமும்நீர் ஏனழுக வேண்டும்என று
தைரியத்தை எடுத்துரைத்தாள் மகளாமந்தக்
கனகமவ ளதுகண்டு கிழவன்பின்னர்,
கவலைவிடுத் தின்பமது கொண்டான்சற்று.

பொல்லாத நோய்வந்து கிழவிதன்னை
பற்றிடவே கோபாலன் வெளியில்எங்கும்;
சொல்லாத குறைகளையும் சொல்லிச்சொல்லி
சோர்வடைந்து திண்ணையிலே படுத்தான்பாவம்.
இல்லாத குறைதவிர வேறென்றில்லை,
இதற்கென்ன செய்திடுவான் பாவம்ஏழை.
மெல்லாமல் விழுங்காமல் வாயைமூடி,
மௌனமுடன் கோபாலன் இருந்தானந்தோ !

வயதிருக்கும் போதுநாம் வம்புபேசி,
வீண்காலம் கழித்திட்டோம் யென்றுயெண்ணி;
பயப்பட்டு வாழ்க்கையிலே வெறுப்புதட்டி;
பாங்கான கிழவனவன் இருந்தானன்று.
சுயபுத்தி இல்லாமல் கிழவிநோயால்
சுருண்டுருண்டு கிடந்திட்டாள் படுக்கைதன்னில்
நயமாகப் பேசிக்கொண் டிருந்தாளந்த
நன்மகளாம் கனகமவள் என்னசெய்வாள்.

சிறுசேமிப் பொன்றையவன் செய்துவைத்து
இருந்திருந்தால் இப்பொழுது குறையேயில்லை.
அறுபதுக்கு மேல்வயது ஆச்சேஇப்போ;
யார்வந்து கடன்தந்து உதவிசெய்வார்.
உறுதுணையாய் இருக்கவொரு நபரைக்காணேம்.
உணர்விழந்து மெய்மறந்து போனான்பாவம்.
வறுமையிலே இருக்கின்ற நிலைமைகண்டு
வந்தவர்கள் போனவர்கள் உதவவில்லை.

சிக்கனமாய் செலவழித்து சேர்த்திருந்தால்;
சிரமமது இல்லாமல் இந்தநேரம்,
மக்களுடன் மதிப்பாக இருப்போமின்று
மதிக்காமல் பணத்தைநாம் செலவுசெய்ய,
இக்கட்டு ஏற்பட்டு நிலைமைகெட்டு
இருக்கின்றோ மென்றழுதான் கிழவன்பாவம்.
சிக்கனமற் றிருந்திட்டால் ஐயோவாழ்க்கை,
சீரழிந்து போகுமென நைந்தானுள்ளம்

மக்களிலே வசதியுள பெண்கள்வந்து
மனமுவந்து உதவியது செய்வாரில்லை.
இக்கொடுமை யார்சகிப்பார் பிள்ளைபெற்றும்,
என்னசுகம் கண்டோமென் றழுதான்நன்றாய்.
பக்கத்தில் வந்திருந்து உதவிசெய்ய
பாவையர்கள் எண்ணலையே என்றுசொல்லி
துக்கத்தில் இருந்திட்டான். உள்ளம்நொந்து.
துயரத்தால் மெய்மறந்து போனனன்னேன்.

சிக்கனமாய் ஒன்றிரண்டு பெற்றுக்கொண்டு
செலவினையும் குறைத்திருந்தால் நண்மையுண்டு.
மக்களையும் கணக்கின்றி பெற்றுக்கொண்டு,
மனமபோன போக்கெல்லாம் செலவுசெய்தால்;
தக்கபடி வாழமுடியாதுயென்று;
தானினைத்துப் பெருங்கவலை யுற்றானன்றோ.
மிக்கவிந்த வேதனையை யார்தான்வென்று
மீழுவது என்றெண்ணி துயரங்கொண்டான்.

பக்குவமாய் வாழாமல் வாழ்ந்ததாலே,
பலர்முன்னே பரதேசி யானேனென்று;
சொக்கினதோர மாடாகக் கிடந்தானன்றோ.
சுறுசுறுப்பே இல்லாமல் கனகம்என்பாள்
மிக்கபெருங் குழப்பமுடன தாயாரண்டை
மௌனமுடன அழுதவண்ண மிருந்தாள்பாவம்.
அக்கரையே இல்லாமல் அக்காள்தங்கை,
அவரவர்கள் பெருமையினை பேசிக்கொண்டார்.

மரிக்கின்ற நிலையிலன்னை இருக்கும்போது
மனமகிழ்ச்சி யுடனக்காள் தஙகைஎன்பார்;
புரியாத கொள்கைகளை எல்லாம்பேசி
பூரிப்புக் கொண்டார்கள் புத்திகெட்டு.
அரிசிசரி யாயரிக்கத் தெரியாப்பெண்கள்
அரசியலைப் பற்றிவெகு விரிவாய்ச்சொன்னார்.
சரியாக சமைக்கவெதும் தெரியாதானல்,
சளைக்காமல் பிள்ளைகளைப் பெற்றுக்கொண்டார்.

அலங்காரம் மிகவதிகம் செய்துகொண்டு
ஆண்களுக்கு வேலைகளை வைத்துவிட்டு,
பலகாரப் பையோடு சினிமாபார்க்க
பாவையர்கள் செல்லுவதைப் பேசிக்கொண்டு
கலகலென சிரித்தார்கள். கனகம்பார்த்து,
கவலையுடன் முகமதனைத் திருப்பிக்கொண்டு,
செலவழிக்க வந்தார்கள் வேறொன்றில்லை;
சிருக்கிகளைப் போலவென நைந்தாள்பாவை.

அதிகாரம் செய்கின்ற பெண்கள் என்னே!
அக்கிரமச் செயல்களுக்கு எல்லையுண்டா?
புதிதாகக் கலியாணம் செய்தபெண்கள்
போடென்றால் அவன்தோப்புக் கரணந்தன்னை,
மதிகெட்டுப் போடுகிறான். மனைவிபார்த்து
மகிழ்கின்றாள், பணிவிடையும் உண்டுபின்னர்.
அதிகாரத் திற்காண்கள் கட்டுப்பட்டு;
அடங்கிமிக ஒடுங்கியிருக் கின்றாறென்னே!

இன்மொழிகள் பேசுகிற இவர்கள்கூட
இல்லத்தில் ஆண்களிடம் வேலைவாங்கும்;
கன்னிகள்தாம் அக்காளும் தங்கையென்று,
கண்டித்துக் கொண்டிட்டாள் தனக்குத்தானே,
மின்னிடையாள் கனகமவள் பிறகுசென்று
மனக்குழப்ப முடன்வீட்டு வேலைபார்த்து
அன்னைக்கு ஆகாரம் செய்துவந்து
அன்போடு தந்திட்டாள். அவளும்தின்றாள்.

ஆண்பிள்ளை உடன்பிறக்க வில்லை;சென்று
ஆதரிப்போம என்றுமன மில்லையந்த,
வீண்கர்வம் கொண்டவிரு அக்காள்தங்கை;
வேடிக்கை யாய்பேசி இருந்திட்டார்கள்.
சாண்வயிறு தனைவளர்க்க மனிதன்என்ன
சாதனைகள் செய்யணுமிக் கொடுமைஎன்னே!
பேண்பிடித்த தலையோடு கிழவிபாவம்,
பேசாமல் கிடந்திட்டாள் என்னசெய்வாள்.

குழந்தையற் றிருந்தாலும் குறையேயில்லை,
குடித்துவிட்டு எதையேனும் சாவோமென்று
குழப்பமுடன் கிழவனவன் படுத்துக்கொண்டு,
குறைபோக்க வழியென்ன யென்றுயெண்ணி
மழுப்போடு படுத்திருந்தான் திண்ணை தன்னில்.
மகளந்தக் கனகமவள் அழுதாள்கண்டு.
குழந்தைநீ தானெனக்கு மற்றபெண்கள்
குடிகொடுக்கும் கோடாறிக் காம்புஎன்றான்.

அப்பனுடன் மகளுமொன் ருகக்கூடி
அழுதிட்டாள். அழுதிட்டாள் அழுதிட்டாளே!
செப்பாத வார்த்தைகளைச் செப்பிச்செப்பி
சீரழிந்து மெய்மறந்து குலைந்திட்டாளே!
தப்பான காரியத்தைச் செய்தேனென்று,
தன்னைத்தான் நொந்துமிக கடிந்துக்கொண்டான்.
அப்பொழுதே சிக்கனத்தைச் செய்துகொண்டு
அளவோடு இருந்திருந்தால் குறையேயில்லை.

என்றந்தக் கோபாலன் சொல்லிக்கொண்டு,
ஏமாந்த வாறெழுந்து வெளியேசென்று
நின்றெதையோ சிந்தனைதான் செய்தபின்னர்;
நிதானமுடன் மறுபடியும் உள்ளேவந்து
அனபாக கனகத்தை அழைத்துஏதோ;
ஆசையுடன் பேசிப்பின் படுத்தான்சென்று
என்னவிதம் தார்முடிய போமோவென்று,
எளியவளாம் கனகமவள் நினைத்தாள்வாடி.

நோய்தீர வழிசெய்ய வேண்டும் என்று
நைந்துருகி கனகமவள் தந்தைமுன்பு,
வாய்விட்டு அழுதிடவே தந்தைசென று
வற்புறுத்தி மருத்துவனை அஞ்சிகெஞ்சி;
நாய்போன்று எனையெண்ணி வந்துஎந்தன்
நாயகியைக் காப்பாற்ற வேண்டும்என்று
பேய்பிடித்த வாறு அவன் அலைந்தான்கண்டு,
பிரியமுடன் மருத்துவனும் வந்தான்பார்க்க

வந்தஅந்த மருத்துவனே கிழவிதன்னை,
வகையோடு கவனித்து, மருந்துவாங்க
தந்திடனும் பணமெனக்கு என்றன்.மெல்ல
தைரியமே இல்லாத கிழவன்பாவம்,
எந்தவித மாயேனும் நோயைத்தீர்த்தால்;
ஏதேனும் வழிசெய்து பின்னுல்உங்கள்
சிந்தையது தான்குளிர கேட்டகாசு
சீக்கிரமாய் நான்தாரேன் என்றன்பாவம்.

அதுகேட்டு மருத்துவனும் ஒப்புக்கொண்டு,
அப்படியே ஆகட்டும் என்றுகூறி,
மெதுவாக நனருகக் கிழவிதன்னை;
மறுபடியும் ஆராய்ந்து பார்த்துபின்னர்
புதுவிதமாய் வந்துற்ற மருந்துகள்தாம்
புன்னகையோ டன்னவனும் வாங்கிவந்து
ஏதுவுமெதிர் பாராத வண்ணம் தந்து
ஏழையவளை தனைக்காக்க முயற்சிசெய்தான்.

அன்னையிடம் அருகினிலே அமர்ந்துமிக்க
அமைதியுடன் கனகமவள் பழங்கள் தந்தாள்
அன்னவளை ஈன்றெடுத்த தந்தைஎன்பான்
அருகினிலே அமைதியுடன் இருந்தான்பாவம்.
சனமுடன் சிரித்தவண்ணம் கடையாள்முத்தாள்
சரியாகக் கனகத்திடம் பேசாமல்தான்
திண்ணையிலே அமர்ந்துபெருங் கோபங்கொண்டு
தங்களது பெருமைகளை பேசிக்கொண்டார்

மூனறுபவுன் தங்கநகை ஒன்றுதாயார்
முதலாக வைத்திருந்தாள் கழுத்திலபோட்டு;
மூன்றிலொரு பாகமது கிடைக்கும்தாயார்
முடிந்திட்டால் தங்கம்நமக் கென்றுரைந்த;
சானற்ற பெண்மணிகள் கடையாள்மூத்தாள்.
சந்தித்து தந்தைதனை கனகம்என்ற
சான்றுடையாள் அம்மாவின் நகையைவிற்று
செலவான மருந்துக்குத் தருவாயென்றுள்.

மகள்சொன்ன மொழியதனைக் கேட்டுப்பின்பு
மயக்கமுடன் மனமுடைந்து மெலிந்துவாடி,
அகலாத துக்கமுடன் கண்ணீர்மல்க
அவனுடைய மனைவியிடம் நகையைமெல்ல
தகர்த்துப்பின் கடைக்கேகி விற்றுனந்த;
தகவலினைக் கேட்டார்கள் கடையாள்மூத்தாள்.
அகம்வேக அக்கணமே சென்றிட்டார்கள்
அதுகண்டு கிழவனவன் மயக்கங்கொண்டான்.

நகையதனை விற்றுவந்த கிழவன்மிக்க,
நிலைகெட்டு மயக்கமுடன் படுத்தான்பாவம்.
துகையதனை கனகமவள் வாங்கியெண்ணி,
துயருற்ற அன்னைக்கு மருந்துக்காக
மிகையற்ற முறையோடு செலவுசெய்தாள்.
மயக்கநிலை போயினபின் கிழவன்கண்டு;
திகைத்திட்டான் ரஞ்சிதமும, மல்லிகாவும்
தெரியாமல் சென்றிட்ட நிலையையெண்ணி.

பணமெல்லாம் செலவாகிப் போககொஞ்சம்
பாக்கியது சொன்னாகள் மருத்துவர்க்கு;
குணமானல் ஒருவாறு பரவாயில்லை
கும்பிட்டாள் தனமகளை கிழவிமெல்ல.
பணம்கொடுத்த சேட்டொருவன் வந்துவீட்டில்
பயமுறுத்திச் சென்றிட்டான் பாக்கிக்காக.
குணமடைந்த கிழவியவள் வீட்டைவிற்று
கொடுத்துவிடு கடனதனை என்ருள். அனனேன்;

வீடதனை விற்பதற்கு முயற்சிசெய்து,
விலைபருவம் நன்றகத் தெரிந்துகொண்டு
ஏடதனை முறையோடு எழுதிநன்ருய்
ஏற்றவொரு ஆளுக்கு விற்ருன்விற்று;
கூடத்தன் மகளான கனகம்தன்னை
கூட்டிக்கொண் டன்னவனே சென்றுசேட்டு
வீடதனை அடைந்துபின் அவனுக்குற்ற
வகையோடு கணக்கதனைக் கழித்தானன்று.

கணக்காகப் பணம்பெற்ற சேட்டுபின்னர்
கட்டிடனும் வட்டிதனை இன்றேஎன்ருன்.
இணக்கமுடன் கிழவனவன் அவனைப்பார்த்து
இன்னுஞ்சில மாதங்கள் சென்றபின்னர்;
பணமெல்லாம் தந்திடுவேன் பொறுங்கோஎன்ருன்.
பார்த்தந்த சேட்டு அவன் ஒப்புக்கொண்டான்.
பணக்காரன் சரிசொல்ல மகளும்தானும்
பதிலொன்றும் பேசாமல் இல்லம்சேர்ந்தார்.

பிறகின்னும் உள்ளவந்த பாக்கிதன்னை
பின்னுஞ்சில மாதங்கள் சென்றபின்னர்;
மறவாமல் தந்திடனும் என்றுவந்து
மனக்கவலை யுடன்மனைவி இடத்தில்சொன்ஞன்.
திறமுடைய கனகமவள் விடைதான்பெற்று
தன்னுடைய ஊருக்குச் சென்ருளன்று.
அறமுடைய கிழவனவன் கிழவியோடு,
ஆங்குஒரு குடிசையினை அடைந்துவாழ்ந்தான்.

விறகுதனை வெட்டிவிற் றதனைக்கொண்டு
வெறுப்போடு ஜீவனத்தை செய்துவந்தான்.
பிறகொருநாள் சேட்டவனே வந்துகேட்டான்.
பணமெனக்குப் பூராவும் வேண்டும்என்று.
உறவுஅறப் பேசியவன் சென்ருன்.அந்த
உத்தமனும் கிழவனவன் உள்ளம்வாடி
உறவோடு மக்களந்த மூவர்கட்கும்,
உத்தரவு கேட்டிட்டான் கடிதமபோட்டு.

வட்டிதனை கட்டமுடி யாமல்நொந்து,
வலுவிழந்து பொலிவிழந்து இருந்தான்பாவம்
பெட்டிப்பாம் பாயவனே அடங்கிப்போஞன்
பிரியமிலா வாழ்க்கையது செய்துவந்தான்.
கெட்டியிலா எண்ணமது கொண்டுநாளும்
கிழவனவன் மெலிந்துள்ளம் வாடிநின்ருன்.
அட்டியெதும் இல்லாமல் கிழவிக்கன்னேன்
ஆவனவெல் லாம்செய்து வந்தான்நாளும.

மாம்பழத்திற் குள்வண்டு தோன்றியாங்கு
மறைந்திருந்து குடைந்திட்ட வாறுபோல;
தாம்பெற்ற கடனுலே உள்ளத்துள்ளே
தாங்கமுடி யாதபெருங் கவலையொன்று,
மாம்பழத்து வண்டாகத் துளைத்திற்றந்தோ!
மறக்கமுடி யாதிந்த நிலையை என்றும்.
நாம்செய்த தீவினையோ என்றுஅன்னேன்,
நடுநடுங்கி மிகவாடி ஒடுங்கிநின்ருன்.

கடனடைக்கப் பணம்கொஞ்சம் தேவையென்று
கடிதத்தில் தந்தையெழு திட்டசெய்தி,
மடமடென மூத்தமகள் படித்துப்பார்த்து
மகிழ்ச்சியுடன் கணவனிடம் காட்டிக்கிண்டற்
கிடமாகப் பேசிப்பின் பணமாமந்த
கிழவனுக்கு என்றதனை கிழித்துப்போட்டாள்.
கடனுக்கு வந்திட்ட கடிதம்தனனை
கனகமவள் பார்த்திட்டாள் அழுதாள்நன்ருய்

கணவனவன் வந்தவுடன் காட்டஅன்னேன்;
கலங்கிப்பின் பலபக்கம் சென்றுகெஞ்சி
பணம்கேட்டான் தரமறுத்தார் இல்லமசேர்ந்தான்
பாவையவள் அழுதிட்டாள் மனதுநொந்தான்.
கணவனவன் பள்ளிவிட்டு வந்தபின்னர்;
கடிதத்தைக் காண்பித்தாள் கடையாள்கண்டு
கணவனந்த ஆசிரியர் சிரித்தான்மெல்ல,
கவலையற்ற ரஞ்சிதமோ அடுப்பில்போட்டாள்.

கனகத்திற் கைந்தாண்டு களுக்குமேலே
குழந்தையது இல்லாமல் இருந்துபின்னர்,
தனக்குப்பெண் குழந்தையது மிகவும்நன்ருய்
தகுதியுடன் பிறந்ததுவே ஆனுல்ஏழை.
கணவனவன் பாதிரிமா ரிடத்தில்வேலை
கவனமுடன் செய்தான்ரூ நாளுக்கொன்று
கணக்காகப் பெற்றிட்டான் கனகம்வீட்டார்
கஷ்டத்தில் ஒருவேலை உணவைவிட்டார்.

உண்ண,வுடை உடுப்பதற்கும் இருப்பதற்கும்
ஒருவழியும் இல்லாமல் கனகம்வீட்டார்;
எண்ணுத எண்ணமெலாம் எண்ணியெண்ணி,
எளியவராய் மெலியவராய் வாடிவாழ்ந்தார்.
கண்கவரும் வண்ணமுடன் மூத்தாள்வாழ்ந்தாள்.
கணவனவன் காரோட்டி மிச்சம்சேர்த்தான்.
பண்டிதராய் பள்ளியிலே வேலைபார்த்தான்
பாவையந்த கடையவளின் தலைவன்என்பான்.

கடையவளும் மூத்தவளும் கருத்தாய்வாழ்ந்தார்.
கருமிகள்தாம் யாவருக்கும் உதவிசெய்யார்.
இடையிடையே இருபேரும் கலந்துமிக்க
இன்பமொழி பேசிடுவார் கனகம்தன்னை
எடைபோட்டு வந்தார்கள். வாழ்க்கைதன்னில்,
ஏளனமாய் யெண்ணிவெறுத் திருந்திட்டார்கள்.
படைஎடுக்கும் பாவனையில் அக்காள்தங்கை
பதைபதைத்து இருந்தார்கள் கொடுமைஎன்னே!

இவ்வாறு உள்ளவர்கள் பெற்றோர்தம்மை,
இருந்துஉப சரிக்காமல் பெருமைகொண்டு;
எவ்வாறோ சாகட்டும் என்றுயெண்ணி
எடுப்பாக வெறுப்பாக இருந்திட்டார்கள்.
கொவ்வைக்கனி போல்சிவந்த கண்களோடு
கோபாலன் அழுதழுது மெலிந்துபோனான்.
அவ்வாறு உள்ளவந்த தந்தைதன்னை
அவர்களெதும் கேட்டுதவி செய்தாரில்லை.

தந்தையவர் எழுதிட்ட கடிதம்தன்னை,
தன்னுடைய கரத்தினிலே வைத்துக்கொண்டு,
சிந்தனையில் இருந்திட்டாள் கனகமவளின்,
சகிக்காத துன்பத்தைக் கணவன்கண்டு
பந்தமுள தன்குழவி தன்னையாங்கு
பாதிரியார் ஒருவரிடம் விற்றான்-பின்னர்
இந்தவித மானதுவே என்றுஅந்த
இன்னலுற்ற கனகமவள் அழுதாள்மேலும்.

விற்றதுகை ரூநூறும் கொடுத்தானன்னோன்.
விரைவாகத் தந்தைதனை சென்றுகண்டு
பற்றோடு பணத்தையவள் கொடுத்தாளந்த,
படுகிழவன் கைநடுங்க வாங்கிசேட்டுக்
குற்றதுகை கிடைத்ததெனை எண்ணிச்சென்று
கொடுத்திட்டான். சேட்டவனோ வட்டிகேட்டு
குற்றமது சொல்லியிரண் டடியும்வைத்தான்.
குலைநடுக்கங் கொண்டுஅவன் சுருண்டுவீழ்ந்தான்.

அதையொருவன் ஓடிவந்து வீட்டில்சொல்ல
அலறியடித் தாவேச மாகவாங்கு,
பதைபதைக்க மகளோடு தாயும்சென்ருள்.
பார்த்தார்கள் நிலைமையினை அழுதிட்டார்கள்.
இதைவைத்துக் கொள்ளென்று கனகம்என்பாள்,
இருந்திட்ட தாழிதனைக் கழட்டிசேட்டு
சதைநோக அவன்மேலே எறிந்தாள்வீசி.
சட்டென்று சேட்டுஅவன் எடுத்தான்கையில்.

அநியாய வட்டியது வாங்கிவாங்கி
அதிகபணம் சேர்த்தாலும் ஒருநாளைக்கு
விநியோகம் செய்யாமல் விட்டுவிட்டு
வெடுக்கென்று உயிர்துறந்து பாடைஏறி
தனியாகப் போவதுமெய் என்றுநன்ருய்
தைரியமாய் கனகமவள் எடுத்துக்கூறி
நனிசிறந்த தந்தையினை தூக்கிவாறி
நன்ருக உட்கார வைத்தாள்பாவம்

உலகத்தின் நிலைமையினை எண்ணிப்பாரு
உலுத்தன்போல் உளருகிருய் வட்டிக்காக
வலுத்தவருய் இருக்கின்ருேம் என்றுயெண்ணி
வறுமையினுல் வாடுகின்ற எங்கள்தம்மை
செலுத்தென்று சொல்லுகிருய் வட்டி இன்றே.
செலுத்தாமல் விடுவோமா இதனைஎன்று,
கலக்கமுடன் கனகமவள் சொல்லிச்சொல்லி
கண்ணீரை விட்டழுதாள் அந்தோபாவம்.

தங்கத்தி னுல்செய்த தாழியோடு
தலையாட்டிக் கொண்டுள்ளே சென்றசேட்டு
மங்கியதோர் குரலோடு வெளியேவந்து
மண்ணிக்க வேண்டுமென கேட்டுக்கொண்டு
சங்கடமாய் இருந்திட்டக் கிழவன்தன்னை
சார்ந்தங்கு சமரசத்தைச் சொல்லிப்பின்பு
எங்கட்கு அறுபதுரூ வட்டிபோக
எண்பதுரூ மீதியது இந்தாவென்ருன்.

பெண்ணந்தக் கனகமவள் ரூபாய்தன்னை
பெற்றபிற கப்பாவை அழைத்துக்கொண்டு,
கண்கலங்கக் கடைக்கேகி தாழியொன்று
கருத்துடையாள் கழுத்திற்கு வாங்கிக்கொண்டாள்.
மண்ணுக்குப் பாரம்நம் வாழ்க்கையென்று
மங்கைநினைத் தறுபதுரூ கடைக்குத்தந்தாள்.
எண்பதிலே இருபதுரூ மிச்சம்பத்தை
எடுத்துத்தன் தந்தைக்குக் கொடுத்தாளன்பாய்.

பாக்கியவள் ரூபத்தை எடுத்துக்கொண்டு
பட்சமுடன் விடைபெற்று பதிக்குச்சென்றாள்.
பாக்கிமாய் கனகமவள் வாழவேண்டி
பகவானைப் பெற்றோர்கள் வேண்டிட்டார்கள்.
ஏக்கமுடன் ஊர்சென்று கணவன்முன்னே;
ஏமாந்த வாரந்தக் கனகம்நின்றாள்.
நாக்குழற மனைவிக்கு எடுத்துச்சொல்லி
நடுக்கமுடன் நின்றிட்டான் வெளியேபோக.

முருகாவுன் செயலிதுவா! என்றுசொல்லி
முகத்தையவள் மூடிக்கொண் டழுதாள்மங்கை.
வருகவென் குறைதீர்க்க வென்றுவேண்டி
வாய்விட்டு ஓவென்று அழுதாள்பாவம்
தருகவுன் அருளதனை என்றுசொல்லி
தண்ணீரை கண்களிலே விட்டாள்பாவம்.
இருகரங்கள் தான்குவித்து அழுதுநின்றாள்,
இறைவனந்த முருகன்தனை வேண்டிவேண்டி.

தலைவிக்குத் தைரியத்தைச் சொல்லிப்பின்னர்.
தன்னுடைய வேலைக்கு வெளியேசென்றான்.
விலைமதிக்க வொண்ணாத கனகம்என்னும்
விவேகமுள பெண்ணவளின் கணவன்என்பான்
குலைநடுக்கங் கொண்டுபெருங் குழப்பத்தோடு
குடியிந்தக் கதியிலிருக் கிறதேயென்று
நிலைகெட்டு மதிகெட்டு கவலைகொண்டு
நடந்தானே வேலைக்கு சோமுஎன்பான்.

வழியிலவன் செல்லுகையில் அந்தநேரம்
வீடொன்று விழவந்த வீட்டுக்காரர்
அழிகாலம் அடியிலவர் சிக்கிக்கொண்டார்.
அமுக்கியது விட்டமது அவரை நன்ருய்
பழிவாங்க பகவானே நினைத்திட்டானே!
பாவமந்தக் கனகத்தின் புருஷன் சென்று,
விழிபிதுங்க விட்டத்தை அப்பால்தள்ள
விரைவாக உருண்டிவனை அமுக்கிற்றையோ!

தேனில்விழுந் திட்டதொரு ஈபோலன்னேன்,
தீராத துயரத்துக் காளாயானன்.
யானினிமே லென்செய்வே னென்றுதுள்ளி
யாருக்கும் தெரியாமல் கண்ணீர்விட்டான்
மேனிநிறம் மாறியொரு நிறத்தைப்பெற்று
மெலிந்துவுடல் வாடிமிகக் கவலைகொண்டான்.
நானினிமேல் உயிரோடு இருந்தாலென்ன
நன்மையது உண்டென்று நினைத்தானன்னேன்.

காப்பாற்றச் சென்றவன்மேல் விட்டம்வீழ்ந்து
கஷ்டததை அனுபவித்தான். வீட்டுக்காரர்
ஏப்பமிடு வதைப்போல பெருமூச்சிட்டு
எழுந்துமெது வாய்வந்து பார்த்தார் பின்னர்,
கூப்பிட்டு சீக்கிரமாய் ஆட்கள் தம்மை
குறையெதுவும் இல்லாமல் அவனைமெல்லக்.
காப்பாற்ற ஏற்பாடு செய்யவெண்ணி
கண்ணியத்தோ டன்னவரும் முயற்சிசெய்தார்.

அடிபட்டு விட்டத்தின் அடியிற்சிக்கி
அப்படியே செத்தவன்போல் ஐயோபாவம்
துடிப்பெதுவும் இல்லாமல் கிடந்தானந்த
துயரத்தைக் கண்டந்த வீட்டுக்காரர்
துடியாகத் துடித்துக்கொண் டையோவென்று
தொலைதூரம் கேட்கவெகு சப்தம்செய்தார்.
படிப்பகத்தை நாடிபல பேர்கள்சென்ருர்.
பயங்கரமாய் இவர்செய்த சப்தம்கேட்டார்.

கொஞ்சமவ காசத்திற் கூட்டம்வந்து
கூசாமல் விட்டத்தைத் தூக்கியப்பால்
அஞ்சாமல் வைத்திடவே. அதற்குப்பின்பு
அசைந்தந்த கனகத்தின் கணவன்மெல்ல
கெஞ்சுகின்ற பாவனையில் நகர்ந்துவந்து
கூன்விழுந்த கிழவன்போல் அமர்ந்தான்பாவம்.
இஞ்சிக் கசாயமது போட்டுவந்து
இணக்கமுடன் கொடுத்தார்கள் குடித்தான்மெல்ல.

நெஞ்சிலடி பட்டதினுல் அவனுல்நன்ருய்
நிமிர்ந்தெழுந்து நிற்கத்தான் முடியவில்லை.
கஞ்சங்கு ஒருவீட்டில் வாங்கிவந்து
கனகத்தின் கணவனுக்குக் கொடுத்திட்டார்கள்.
கொஞ்சமவன் குடித்திட்டான் அதற்குமேலே
குடிக்கமுடி யாதநிலை கொண்டானனன்ஞேன்.
அஞ்சாதீர் என்றங்கு வந்தோர்சொல்லி
அருகிலுள மருத்துவத்தின் மனையில்சேர்த்தார்.

குணவதியாள் கனகமவள் வீட்டில்வேலை
கொடுமையுடன் செய்தவண்ண மிருந்தாள்-ஓராள்
கணவனுக்கு இடையூறு என்றுவந்து
கம்மியதோர் குரலோடு சொன்னுன்-கேட்டு
கணவருக்கா ஐஐயோ யெங்கேயென்று
காற்ருகப் பறந்திட்டாள் இடத்தைநாடி.
பணவசதி நிறைந்துள்ள வீட்டுக்காரர்
பார்த்துரைக்கக் கனகமவள் அமைதிகொண்டாள்.

கனகத்தின் கணவனுக்கு வீட்டுக்காரர்
கணக்கின்றி செலவுமிகச் செய்தார்நாளும்.
தனக்குற்ற ஆபத்தைத் தீர்த்ததாலே
தன்மகனைப் போலவனை எண்ணிவந்தார்.
குணம்கொஞ்சம் ஆயினபின் மகளின்எண்ணம்,
குடிகொள்ள கனகத்தின் ஆசைக்கேற்ற
கணவனுக்கு அதனுலே புத்திமாறி
கவலையுடன் பலவாருய் பேசலானுன்.

சிங்காரி சிங்காரி என்றுசும்மா
சிந்தனையில் இருந்திட்டான் பிறகுநன்றாய்
சிங்காரி என்றுஅவன் சப்தம்போட்டு
சாய்ந்திட்டான் படுக்கையிலே. அதனைக்கண்டு
சிங்காரி என்றழுதாள் கனகம்கூட.
சீக்கிரமாய் இதுவிபரம் சொல்லும்என்று
மங்காத புகழுடைய வீட்டுக்காரர்
மகிழ்ச்சியுடன் விபரமுடன கேட்டாரன்பாய்

கனகமந்த பெண்ணவளோ கண்ணீர்விட்டு
கதையெல்லாம் நன்றாகச் சொன்னாள்—கேட்டு
கனகமினி கவலையது வேண்டாமென்று;
கடிதினிலே அன்னவரோ சென்றுஅந்த
குணவதியாள் குழந்தைதனை மீட்கவெண்ணி
காரணங்கள் எல்லாமே எடுத்துக்கூறி
பணத்தையிவர் கொடுக்கவவர் வேண்டாமென்று
பெண்குழந்தை தனைக்கொடுத்து அனுப்பிவைத்தார்

பெண்குழந்தை தனைஎடுத்துக் கொண்டுஅந்த
பாதிரியார் அன்போடு ஆர்வம்சொட்ட
மண்புழுதி மேலெழும்ப வண்டிஏறி
மனவேக மாயவரோ வந்துஅந்த
புண்பட்ட பெற்றோர்கள் இடத்தில்காட்ட
பெருமையுடன் வண்டிவிட்டு இறங்கிக்கீழே
பெண்மகவை தோளிலிட்டுச் சென்றுஅந்த
பெண்ணவளாம் கனகத்திடம் தந்தாரன்பாய்

குழந்தையினைக் கண்டிட்ட கனகம்சொந்தக்
கணவனுடன் சேர்ந்துமிக மகிழ்ந்துதுள்ளி
குழந்தையினை வாரியவள் எடுத்துக்கொண்டு,
கொஞ்சாத கொஞ்செல்லாம் கொஞ்சலுற்றாள்.
குழந்தையினைக் கண்டவுடன் அவனுக்குற்ற
குறைதீர்ந்து நோய்தீர்ந்து சுகத்தைப்பெற்றான்.
குழந்தையுடன் மூவரையும் வீட்டுக்காரர்;
கூட்டிக்கொண் டில்லமது சென்றாரன்பாய்.

சென்றவுடன் நீராடச் செய்துபின்னர்
சொகுசாக உணவுவுடை அளித்தாரன்பாய்.
நன்ருக உண்டார்கள் இன்பத்தோடு
நேர்மையுள வீட்டதிபர் பார்த்துப்பின்னர்;
ஒன்ருக உட்கார்ந்து தானும்உண்டார்.
ஒருநாளும் காணுத பழங்கள்என்ன!
தின்பதற்கு அறுசுவையோ டன்னம்என்ன!
தெய்வத்திரு வருள்பெற்று மகிழ்ந்திட்டார்கள்.

தன்னுயிரைக் காத்திட்ட ஏழைக்கந்த,
தனவானே பெரியதொரு இல்லம்தந்து
அன்பாக பணம்நிறைய கொடுத்து ஆங்கு;
ஆவலுடன் குடியிருக்கச் செய்துவைத்தார்.
தென்பாகத் தொழிலொன்று துவக்கிக்கொண்டு,
தேவைக்கு வசதிபல செய்துகொண்டான்.
அன்புடைய கனகத்தை அழைத்துக்கொண்டு
அவளுடைய பெற்ருேரைப் பார்க்கச்சென்ருன்.

கனகத்தின் தாயாரைக் காத்துவந்த
கடைமையுள மருத்துவனைச் சென்றுகண்டு
குணமாகப் பேசிப்பின் பொருளும்தந்து
கும்பிட்டு விடைபெற்று செனருரந்த
கனகத்தின் தாய்வீட்டை நோக்கியன்பாய்.
கண்டங்கு பெற்ருேரைக் கனகம்என்பாள்;
வினவிவெகு விரைவாக விஷயம்தன்னை
விருப்பமுடன் பேசியவள் பெருமைகொண்டாள்.

பணவசதி ஏற்பட்டு விட்டதென்ற
பாங்கான வார்த்தைதனைச் சொல்லியந்த
கனகத்தின் கணவனவன் மாமனுரை
கவலையினி வேண்டாமென் றெடுத்துக்கூறி
இணக்கமுடன் ஏதேதோ வெல்லாம்சொல்லி
இன்பத்தை அவர்களுக்கு ஊட்டிவிட்டான்.
பணக்காரி நமதுமகள் என்றுயெண்ணி
பெற்ருேர்கள் மகிழ்ந்தார்கள். மகிழ்ந்திட்டார்கள்.

விவரத்தை எல்லாமங் கெடுத்துக்கூறி
விரைவாக அவர்களையும் அழைத்துவந்தான்.
விவகாரம் இல்லாமல் நளும்நனருய்,
விவேகமுடன் தொழிலதனை நடத்திவந்தான்.
எவருங்கண் டஞ்சுகிற வாறுஅன்னேன,
எழிலான முறையோடு தொழிலைச்செய்தான்.
தவருமல் வந்தவர்க்கு வேலைதந்து
தனவானுய் அன்னவனே வாழ்ந்துவந்தான்

உதவிமிக செய்திட்ட வீட்டுக்காரர்
உதவியது மேலும்பல வகையில்செய்தார்.
இதனையந்தக் கனகத்தின் கணவன்என்பான்
என்றும்மற வாமல்மிகப் போற்றிசெய்தான்.
பதமாக ஆட்களிடம் வேலைவாங்கி
பாக்கியெதும் சொல்லாமல் கூலிதந்தான்.
சதமாக எந்நாளும் தொழிலைநம்பி
சற்குணமாய் சோமுஅவன் நடந்துவந்தான்

இன்றேழை நாளைபணக் காரன்என்ற
இலக்கியத்தைக் கனகத்தின் இல்லம்தன்னில்
நன்ருகக் கோபாலன் அறிந்துகொண்டு;
நமக்கினிமேல் தொல்லையது இல்லையென்று
சென்றுபல பக்கமெலாம் சுற்றிப்பார்த்து;
சிறப்போடு பெருமைதனை அடைந்தான்நன்ருய்
அன்ருடம் பாட்டியவள் குழந்தைதன்னை
அன்போடு வைத்துவிளை யாடிவந்தாள்.

மல்லிகையின் கணவனுக்கு மோட்டாரோட்டி;
மெலிந்துவுடல் நோய்பட்டு நின்ருன்வீட்டில்
தொல்லைமிகத் தந்ததுவே நோய்தான்வந்து
தீராத வயிற்றுவலி அதுவும்சேர்ந்து,
எல்லையில்லா துன்பத்தை அளிக்கவந்த
எழிலான சுந்தரமோ பரந்தான்பாவம்.
நில்லாமல் படுக்காமல் தினமும்அன்னேன்,
நடந்தவண்ண மாயிருந்தான் என்னசெய்வான்.

குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டும்!நோயைக்
குணப்படுத்த வேண்டுமவன் அய்யோபாவம்.
படுமோச மாய்மிகவும் இளைத்துப்போனான்.
பார்த்தவர்கள் எல்லோரும் நாக்கைச்சப்பி,
கெடுத்துவிடும் போலிருக்கே நோய்தானிப்போ,
கவனிக்க வேண்டுமிதை என்றுநன்றாய்,
அடுத்தடுத்துச் சொன்னார்கள் கண்டோரெல்லாம்
அதனாலே மல்லிகையோ கையிலுள்ள;

காசைஎதிர் பார்க்காமல் செலவுசெய்து
குணப்படுத்த வெகுமுயற்சி செய்துவந்தாள்.
ஆசையுடன் கணவனவன் கேட்டதெல்லாம்;
அப்பொழுதே வாங்கியவள் தந்துவந்தாள்.
பூசையது செய்திட்டாள் தினமும்வீட்டில்;
புருஷனவன் பிழைக்கணுமே யென்றுயெண்ணி.
தூசைப்போல் காசுதனை செலவுசெய்து,
துரிதமுடன் பொருள்விரயப் படுத்திவிட்டாள்

பொருள்விரய மானதினா லதற்குமேலே,
பொறுப்போடு எதையுமவள் செய்யவங்கு;
விருப்பமது இல்லாமல் கலங்கிவாடி
வீட்டோடு அடங்கியவள் கிடந்தாள்.மற்றும்
இருள்போன்று இல்லமது இருக்கப்பெற்ற
பிள்ளைகளும் பள்ளிவிட்டு நின்றிட்டார்கள்.
பொருள்முடக்கம் ஏற்பட்டு விட்டதாலே;
பிழைக்கவழி யற்றுஅவள் துடித்தாள்பாவம்.

எல்லையிலா வறுமையது கொண்டாளக்கா,
என்றவந்த செய்தியது கேட்டுஅந்த,
இல்லையென்று சொல்லாத எண்ணங்கொண்ட
இளையவளாம கனகமவள் சென்றுஅங்கு,
தொல்லையினி உங்களுக்கு இல்லையென்று;
தென்பாக எடுத்துரைத்து வண்டிஏற்றி
இல்லமது அழைத்துஅவள் வந்துபின்னர்;
இன்பமுடன் எல்லையிலா உதவிசெய்தாள்.

மல்லிகையோ கனகத்திடம் அழுதாள்வாடி.
மனம்சகியா பெற்றோரும் அழுதிட்டார்கள்.
அல்லலினி உங்களுக்கு இல்லையென்று,
அன்போடு அன்னவளும் உறுதிசொன்னாள்.
நல்லமுறை யாயந்தக் குடும்பம்தன்னை
நலமுடனே தன்னிடத்தே வைத்துக்கொண்டாள்.
அல்லலெதுட இல்லாமல் எல்லாம்சேர்ந்து
ஆர்வமுடன் வாழ்ந்தார்கள் நாளுமநன்றாய்.

சுந்தரத்துக் கன்னவளோ நோயைத்தீர்க்க
சொன்னபடி செலவுமிக செய்துவந்தாள்.
எந்தவித மாய்மருந்து கேட்டபோதும்,
இளையவளாம் கனகமவள் வாங்கித்தந்தாள்
பந்தமுடன் அவன்குடும்பம் தன்னை நன்றாய்
பலவழியில் செலவளித்துப் பாதுகாத்தாள்.
குந்தகமே இல்லாமல் நோயைத்தீர்த்தாள்
குணமானன் சுந்தரமும எல்லாம்சேமம்.

மில்லுக்கு முதலாளி ஆனவந்த;
மின்னிடையாள் கனகத்தின் கணவன்சொன்ன
சொல்லுக்கு எப்பொழுதும் மாறமாட்டான்.
சொகுசாக ஆட்களையோ நேசித்திட்டான்
அல்லென்றும பகலென்றும் பாராமல்தான்
ஆர்வமுடன் தன்னுடைய வேலைதன்னை;
எல்லையில்லா முறையோடு கவனத்தோடு,
எல்லோரும் மெச்சுமபடி செய்துவந்தான.

ஆயினுமங் கவனிடத்தில் ஏழைமக்கள்,
ஆண்பெண்கள எல்லோரு மாகச்சேர்ந்து
ஆயிரம்பேர் அன்றுடம் வேலைதன்னை
அன்பாக செய்தார்கள் அவனோஆங்கு
தாயினுமிக் கன்பாக நடந்துவந்தான்.
தங்கமென அன்னவனை போற்றிசெய்தார்.
சேயினுமிக் கன்பாக நடந்ததாலே
சிறப்பாக எல்லோரும் போற்றிசெய்தார்.

கனகத்தின் தங்கையவள் ரஞ்சிதத்தின்
கணவன் கட்சியிலே வேலைசெய்ய
சினத்தாலே அதிகாரி வேலைநீக்கம்
செய்திட்டார். அதனாலே சிரமங்கொண்டு
மனங்கெட்டு வீட்டோடு அடங்கிநின்று
மனக்கவலை யுடனிருக்க, கையில்உள்ள
பணமெல்லாம் பலவாறாய் செலவுஆகி;
பரதவித்து இருந்திட்டான். நிலைமைகெட்டான்.

பொல்லாத காலமது இந்தநல்ல
பண்டிதனும் ரகுநாதன் என்பானுக்கு
சொல்லாமல் வந்ததுவே வாழ்க்கைகெட்டு
சீரழிந்து போனதுவே என்னசெய்வான்.
நில்லாமல் போனதுவே வாழ்வில்கண்ட
நிலையான சுகமெல்லாம் என்னேவாழ்க்கை!
அல்லாத காசெல்லாம் அள்ளியள்ளி
அத்தனையும் செலவிட்டான். வறுமைகண்டான்.

கடன்பட்டும் வாழ்க்கைதனை நடத்திப்பார்த்தான்.
கணக்கில்லை கஷ்டததிற் கதனாலன்றோ;
திடமான நம்பிக்கை இழந்துவாடி
தெருவீதி செல்லுகிற நிலைமைகொண்டான்.
இடர்பட்டு இல்லத்தில் எல்லாம்வாடி
இளைத்துப்போய் இருந்தார்கள் பாவம்பாவம்.
தடமெதுவும் இல்லாமல் தவித்தான்-சொந்தத்
தாய்வீடு போவதற்கும் தகுதியில்லை.

யாரிடந்தான் சொல்லுவது குறையைச்சென்று
என்றந்த ரகுநாதன் புலம்பிநின்றான்.
ஊரினி எவரிடமும் கடனும்வாங்க
உதவாது என்றெண்ணி ரஞ்சிதமும்
பேரிடிபட் டாற்போல புலம்பலுற்றாள்.
பெரியகுறைக் காளாக இருந்திட்டார்கள்.
போரிலடி பட்டவர்கள் போலவீட்டில்,
படுக்கையிலே சதமாகக் கிடந்திட்டார்கள்.

பணமெல்லாம் பறிபோன தினிமேல்வாழ
போதாது வசதியென எண்ணிக்கொண்டு,
மனமுடைந்த ரகுநாதன் துடித்துப்பின்பு;
மனைவியுடன் கலந்துமுடி வெடுத்துக்கொண்டு
இனத்தோடு போய்விடுவோம் என்றுயெண்ணி
எழிலான தொழிலதனைச் செய்துவாழும்
கனகத்தின் இல்லத்தை நாடிச்செல்ல.
கண்டந்தக் கனகமவள் மகிழ்ச்சிகொண்டாள்.

எங்களிடம் என்றுமிக ஒன்றாய்கூடி
ஏகாந்த மாய்வாழ்க்கை செய்வீரென்று
மங்காத ஆர்வமுடன் சொன்னாள்-கேட்டு
மாளாத ஆசையுடன் ஒப்புக்கொண்டு,
தங்கிமிக உற்சாகத் தோடுவேலை
தயங்காமல் செய்துமிக பெருமைகொண்டான்.
பங்கெதுவும் செய்யாமல் ஒன்றாய்கூடி
பட்சமுடன் எந்நாளும் வாழ்ந்திட்டார்கள்

பெற்றோர்கள் தம்மைவிடப் பெரிதுஒன்றும்
பிள்ளைகளுக் குலகினிலே இல்லைஎன்றாள்.
சற்றேனும் பெற்றோரை மதிக்காவிட்டால்;
சடுதியிலே நமக்குமந்தக் கதிதானென்றாள்
பெற்றோரைத் தெய்வமெனப் போற்றிநாமும்
பெருமையுடன் வாழ்க்கைதனை செய்வோமென்றாள்
குற்றமற்ற வாழ்க்கையினைச் செய்யக்கற்று
குடிவுயரக் கோனுயர வாழ்வோமென்றாள்.

நன்றாகக் கனகமவள் சொல்ல;அன்பாய்
நலமோடு பலமோடு கேட்டிட்டார்கள்.
ஒன்றாக ஒற்றுமையாய் இருந்துநாளும்,
ஒழுங்காகத் தொழிலதனைச் செய்திட்டார்கள்.
என்றுமிந்த இல்லத்தில் துன்பமற்று
ஏகவை போகமுடன் வாழ்ந்திட்டார்கள்.
சென்றங்கு பார்த்தவர்கள் எல்லாம்மெச்ச
சிறப்போடு வாழ்ந்தார்கள். வாழ்ந்திட்டார்கள்.

சுபம் ! சுபம் !! சுபம் !!!